உ

முருகக்கடவுள்துணை

# திருஞானவுந்தியார்.

திருநெல்வேலி ஜில்லா
ஆழ்வார் திருநகரியெனவழங்குகிற
திருக்குருகூரென்னும் ஸ்தலத்தில்
எழுந்தருளும்
சித்தாதீனகர்த்தா

## ஸ்ரீமத் ஞானசித்தசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது
இஃது

## ஞானபாஸ்கரவுதையம்

---

## ஆயிரத்துள்ளடங்கிய

---

சில பதிகங்களும் கண்ணிகளும்
அடங்கியிருக்கின்றன.

செங்கல்பட்டுஜில்லா காஞ்சீபுரம்தாலூக்கா
கூவம்கீழ்ச்சேரி
திருச்செங்கோடு சப் ரிஜிஸ்திரார்
ம-௱-௱-ஸ்ரீ அப்பாசாமிமுதலியார்
அவர்களால்

Vellore:
PRINTED AT THE VICTORIA PRESS,
1892.





தேவிசகாயம்.

இந்நூலாசிரியர்

# ஞானசித்தசுவாமிகள்

சரித்திரஸங்கிரஹம்.

---

பரத கண்டத்திலே பாண்டி நாட்டிலே * நவலிங்கபுரம் என்னும் க்ஷேத்திரத்திலே வேளாண்மரபிலே சுமார் நாற்பது வருஷத்துக்குமுன் குருலிங்க சங்கம பத்தியிற் சிறந்த மேலப்பாளையம் முத்துசாமியாபிள்ளை என்பவரொருவரிருந்தார். அவர் மேற்குறித்த நவலிங்கபுரத்திற் சகலசாஸ்திர பாரங்கதராய் விளங்கிய முத்துசுவாமியாபிள்ளை என்பவரின் அருமைப் புதல்வியாகிய சிதம்பரவடிவம்மையை மணம்புரிந்து காலங்கழித்து வருவாராயினர். அங்ஙனம் வாழுநாளிலே தமக்குப் புத்திரப் பேறின்மையால் வருந்திச்செந்தின்மேவிய கந்தக்கடவுளையடைந்து சிந்தைமிகுந்து

---

* ஆழ்வார்திருநகரி.—திருநெல்வேலி ஜில்லாவிலுள்ளது.

வந்தனை புரிந்து புத்திரப்பேறு அடைதல் வேண்டு மென்னும் பேரவாவினுல்

விருத்தம்.

கந்தஷஷ்டித் திருநாளே கந்தாயெமது
கவிதீர்ப்பாய்
வந்தேயிருந்து மகிழ்ச்சிதர வடிவே
லனைப்போற்குஞ்சரனைத்
தந்தேயருள வேண்டுமையா தாயுமகனும்
யானுமதாய்ச்
சொந்தவடிமைபுனைத்துதிக்கத் துணையே
துணையேசெய்வாயே.

எனப்பாமாலை சாற்றினர். அதைத்திருச் செவியேற்ற முருகக்கடவுள் அருள் சுரந்து அனுக்கிரஹிக்கக் கருப்பமுண்டாயிற்று. அது முதல் திருச்செந்தூரினின்றும் புறப்பட்டுத் திருக்கோளூரின்கண்வந்து வசித்தனர். அவ்வி டத்திற் பருவகாலம் பத்தும் முதிர்ந்து ஓர் ஆண்குழந்தை அவதாரமாயிற்று. அதுகண்ட தந்தைதாயார் நீடியகாலம் தவம் புரிந்து தே டியஇவ்வருமைப் பேற்றை நினைந்து நினைந்து மகிழ்ந்து மகிழ்ந்து ஆனந்தசாகரத்தில்மூழ்கி னர். அப்பொழுது பாலகிருஷ்ணசுவாமிகளின்

சிடரான மஹாராஜசுவாமிகள் அவர்வீட்டிற்கு வந்து குழந்தையின் ஞானவல்லமையை அறிந்து ஞானசித்தனென்னும் திருநாமம் தரித்தனர். நாள் முதிர முதிரக் குழந்தையும் ஞான முதிர்ந்து கல்விக்கடலில்மூழ்கினர். இவ்வாறு வயசு பன்னிரெண்டாயிற்று அங்கிருந்துபுறப்பட்டுக் காந்திபுரத்தையடைந்து சிவபெருமானைவழிபட்டு வருநாளிலே சித்புருஷாள் நூல்பலபயின்று மணிமந்திர ஔஷதப்பிரயோகத்திற் றேர்ச்சியடைந்தனர். அதன்பின் சிவயோகாப்பியாசஞ் செய்தல்வேண்டுமென்னும் பேரவாவினாற் பதினாறும் வயதில் துறவறத்திற்சென்று ஆசாரியனைத் தேடிக்கொள்ளுமாறு நாடு நகரங்களிலும் மலைவனங்களிலுஞ் சென்று வருந்தியும் பக்குவக்குறையால் ஆசாரியர் கண்ணிற் புலப்படாதிருக்க மனம் நொந்து வாட்டமுற்றுச் சிரலைவாயுறையும் ஆறுமுகவனைப் பாமாலைசாற்றி வணங்க அவன் தண்ணளிசூர்ந்து ஆசாரிய சொரூபமாய்ப் பிரசன்னமாகி வேதாந்தமாகிய தத்துவப்பொருளை யுபதேசித்து அந்தர்த்தானமாயினர். அதுமுதல் இவர் தமக்குத் தனிமையாகிய ஓர் ஆசனக் கட்டி

அதிலிருந்து நிஷ்டை புரிந்து வருநாளிலே தம்தாயார் தேகவியோகமடைவ தறிந்து இல்லத்திற் சென்று தாய்கரும முடித்தனர். முடிந்தவுடன் பந்துஜனங்கள் இவருக்கு வதுவைசூட்டிக் கிருகஸ்தாசிரமியாக்கவேண்டுமென்னும் அவாமிகுதியால் ஞானசித்தனைப் பலவாறுவேண்டியும் அவர் ஒன்றினுக்கும் இசையாதிருக்க அன்றிரவு சுப்பிரமணியர் "நம்ஞானசித்தனுக்குச் செய்ய நினைத்த முயர்ச்சியை விடக்கடவீர்" என அவர் தந்தையாரிடத்தும் மாதாமஹரிடத்தும்திருவாய் மலர்ந்தருளினர். அது கேட்டஉறவினர் யாவரும் திடுக்குற்று ஞானசித்தரைத் துதித்து வணங்கினர். ஞானசித்தர் சிவயோகத்திலிருந்துகொண்டே சிவாலயத் திருத்தொண்டுகளுஞ் செய்து அற்புதச் சின்ப ... மதுரமான பல பிரபந்தங்கள் திருவாய் மல... தருளியும் வருகின்றனர்.

அவற்றுள் இதுஒன்று. இன்னு முள்ளனவும் முறையே அச்சியற்றப்பட்டு வரும்.

திருச்சிற்றம்பலம்.






முருகன் றுணை.

ஞானசித்தசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# ஞானபாஸ்கற வுதயத்துளடங்கிய
# பதிகங்கள்.



வீட்டைஅடைந்தமிக்கோர்கள்
விமலப்பதத்தை வேண்டுதலே.

## விருத்தம்.

அறிவினுருவாகிய மறுறுமுகதேசிகர்தன்
னருளைப்போற்றி
செரியுறுபோகத்தினிச்சை செயல்முழுதுமோய்ந்து
தெளியாய்ப்புத்தி
குரியதவநிஷ்டையடைந்தின்ப துன்பமிரண்டமற்றுவ
மொப்பில்லாத்
திரிபுவனத்தடியரடி சென்னிமிசைசூட்டிவிக்குந்
திரமிங்கென்றே. (1)

சித்தமுதலாங்கருவிச்செயல்களெலா மும்மொழிந்தே
திரமாமியோகத்

தத்துவமெலாமரிந்த ஞானசமாதியிற்கூடித்
    தானென்றேங்கும்
புத்திதனையெடுத்திங் கெல்லாநின்றன்னருளாய்ப்
    புகளும்நல்ல
முத்தருடபதக்கமலத் தூளணிந்து நிற்பதென்றே-
    மொளியவேண்டும். (2)

கற்பனையெலாங்கடந்த கடவுளெனுமெம்மிறைவன்
    கமலப்பாதப்
பொற்படியாஞ்சுளினைதனிற் புத்தியையுமேநிருத்திப்
    புனிதமான
சொற்பனமாஞ்சுழுத்தியெனு மிவ்விரண்டுக்கப்பாலா
    யத்துலங்கும்பிர்ம்ம
நற்பரத்தோடொன்றி நிற்குந்தவமுனிவரடித்தூளைத்
    தரிப்பதென்றோ. (3)

வாதனையெலாமிரந்த மன்னுபரமாத்மாவாம்
    வஸ்த்துவான
பேதமறுமெம்மிறைவன் பேசுதுரியத்தலத்தே
    பிரளொட்டாதென்
போதமதையும்நிருத்திப் புவனபோகத்தினிச்சை
    பொருந்தாவண்ணங்
கோதருசேர்மாதவத்தோரடிக்கமலந்தன்னிலென்னுட்
    கூடலன்றோ. (4)

அன்றுமுதலின்றுவரை யதிவிட்டயச்செயலிலெமை
யமைத்துமந்தோ
வொன்றுளதென்றெண்ணுமெண்ண மொருநிமிடம்
பிரிந்ததுண்டோ வுடையாய்மிக்க
மன்றதெனுந்துரியமதில் வாழ்முதலேயடிமை
மனவாட்டமெல்லா
மின்றுவரைநீயறிவையாவருமிங்கறிகுவரோ
யெளியர்கோவே. (5)

வாட்டமற்றமாதவத்தோர் நின்னருளிற்கலந்துமிக
வாய்மையான
நாட்டமதையேநினைந்து நானுநின்றேனய்யோகோ
நடுவில்யார்க்குந்
தேட்டமறநடம்புரியுந்திருவருளிற் கடையனையுஞ்
சேர்க்கவேண்டும்
மீட்டுமிதுபோலவுமிம் மேதினியிலடியவர்க்கும்
விளம்பவேண்டும். (6)

வேண்டுவனதருள்புரியுமெய்ப் பொருளேவடியருள
மேவுகின்ற
ஆண்டகையேநின்னருளாய் அமருகின்றஅகிலமுத
லனைத்துமாகி
நீண்டசிதாகாசமெனு நெற்றிநடுநிர்த்தமிடு
நெறியேபின்னுந்
தூண்டுவெளியாகாச மதுவரைக்குந்தோன்றிநின்ற
துருவதேவே. (7)

துருவமெனும்பரவெளியில்தோம்திமிதாமென்றுநிந்
    துரியபூமிக்
கொருமுதலேநின்னருளில் கடைபட்டோர்களொரு
    கோடியோபலதோ வுவமைசொல்லத்
திருவருளே யன்றிமற்றோர்செப்பு
    தற்கோர் நிலையுலதோ வியனேனைப்
பெருவெளியிற்சேர்த்ததினல் யாவருனைப்பேசவதும்
    பிரித்துச்சொல்லே. (8)

சொலத்தகுமோநின்னருளின்பெருமைமுற்றும்
    சொன்னாலுமறிகுவரோதொண்டரன்றி
வெலத்தகுமோமாமாயையென்னுங்கர்மவினைப்பயனை
    வெல்பவரிங்காரோசொல்வாய்
நலத்தகுமேலடியவர்கள் நாடிப்பார்க்கும் நாதாந்த
    முடிவதனில் நடனக்கூத்தின்
றலத்தினிலென்றனையிருத்தலன்றோயிந்தத்தாசன்
    முனம் வந்தருளுந்தகைமையந்தோ. (9)

அந்தமதிதனைப்பெருக்கிஅந்தமதிதன்னி
    லணுவளவுஞ்செல்லவொட்டாதகமதனிலாக்கி
வந்தமதுதன்னையுண்டு வன்பசியைமாற்றிமரித்து
    வருமனமதனைமதியதனுள்ளாக்கும்
இந்தநிலைதனைக்கருதி யிருக்கின்றநாயேற்கின்னருள்
    செய்யாதிடிலிங்கேதும்மடையேன்யான்
நந்திமுதல்முனிவோர்கள் தொழுதுமிகப்பணியும்
    நாதாந்தமுடிவில்வளர் ஞானபரஞ்சுடரே. (10)

காயாபுரியின் கலக்கமுமொருவார்
ஓயாதோவென வோதிடுமொழியே.

சத்தமொடுபரிசரச ரூபகெந்தந்தானடங்கியுனது
பதந்தயவாய்ப்போற்ற
இத்தருணம்வந்தெனக்குன் னருளேதந்துயிரவிடி
கூடுமந்தயெல்லேகாட்டி
முத்தருடன்சேர்த்தருளாய் முருகோனேநீமுழுவதுந்
தன்கருணை தரவேண்டுகின்றேன்
பித்தர்மகிழுத்தமனே சித்தர்போற்றும் பெருமானே
அடிமைமுன்னம் வருகுவாயே. (1)

நிலம்நீர்தீவீசும்புடனேகாற்றுமான நீசனடியேனுமு
னைப் போற்றுவண்ணம்
மலஞ்சூழ்ந்தமாதர்வசஞ் சிக்கியென்றன்மனமதையுந்
தத்தளிக்கவகையேன்செய்தாய்
பலம்சூழ்ந்தகுறனுடற்பிளந்தகோவே பாவியெந்தன்
மனமதையுமடக்கிஇர்தத்
தலந்தனிலேயுனதுபுகழ் பேசிப்பேசி சாயுச்சியபதம
டையததயாளஞ்செய்யே (2)

சித்தையெனுமிவ்வுடலே நித்தியமாகமிக நினைந்தென்பு
த்தியதுந்தளர்வதேனோ
செத்தமரத்தொப்பாமிவ்வுடலினின்று சித்தமதுமுனே
நினைக்கச்செய்யாதேனோ

அத்தன்மகிழாருமுகா வமரர்கோவே யகங்காரமதை
யொடுக்கியருளாதேனோ
உத்தமமாஞ் சித்தர்முனிவோர்கள்போற்று
முயர்முதலேஞானசிகாமணியுளோனே. (3)

ஆணுவகாமியமாய்கையாலே யென்ற னறிவிழந்துதவி
ப்பதென்னவையாவையா
ஊணுரக்கத்தாமிதமுங்காமக்குரோத லோபமுடன்
மோகமதவிவகாரத்தால்
தாணுவுனையான்மறந்தேன் தற்பராநீதயவுவைத்த
மகிமையாலுளருகின்றேன்
வேணுபுரத்தமர்ந்திருக்கும் வீரர்கோவே வேல்முரு
கா நினதுபதியறியச்செய்யே. (4)

தோலெலும்புதசைமூளை சுக்கிலத்தால் தோன்றியயிவ்
வூன்மயக்கின் றுடக்குண்டேதான்
நாவிரண்டோடொன்றறியாவணமேயிந்நானிலத்தில்
வழியரியாதிருக்கும்போது
காலசைவைக்காட்டியெமைத் தர்க்காத்தாண்ட
கர்த்தாவின்னருட்குவமைபுரிவதேது
வேலவனேமறையுணரா வெளியேயென்னை வெட்ட
வெளிதனையுணரப் புரிவாய் நீயே. (5)

காதுடனேகண்மூக்குக்குய்யம்வாயும்
கருதுகின்றகுதத்தோடிவ்வொன்பான்றுளும்
போதகின்ற வழியடக்கித்துவாதசாந்தப்
பெருஞ்சோதிதனையுணரப்புரிவாய்நீயும்

பாதுமுனையன்றியில்வே றுண்டென்றெண்ணும்
யானறியாவழியுணரப்புரிந்தேநீயுந்
தீதுகளுந்தவிர்த்துனது பாதஞ்சேர்த்து
சித்திமுத்தியருள்புரிய வருவாய்நீயே (6)

வாதபித்தசிலேற்றுமத்தாலெடுத்தய்ந்த
வம்பனுடலழிந்திடுகாவணமேசெய்து
போதமயமாயெனையுந் தர்க்காத்தாண்டுன்
பொன்னடியைத்தந்தருளப்புரிவாய்நீயும்
பாதலமீதேதுமரியாதேயிந்தப்
படுமாய்கைக்கடலிலெனைவீழ்த்தாவண்ணம்
ஆதரவாயருள்புரிந்துன் னடியைப்போற்ற
ஆதிபராபரமுதலேயருள்செய்வாயே (7)

சாக்கிறசொற்பனச்சுழுத்தி மூன்றுக்கப்பால்
சாதுரியமாந்துரியாதீதந்தனில்
எக்கமெலாம் நீக்கியும்வைத்தாண்டுன்பாதம்
எப்போதும்போற்றிசெயவரமேதந்து
நாக்குடனேமூக்கடைத்து நயனந்தன்னில்
நாதாந்தப்பரஞ்சுடரையுணரச்செய்யுந்
தீர்க்கமுள்ளசெவ்வேளே அடியேன்முன்பு
சித்திமுத்தியருள்புரியத்துணைச்செய்வாயே (8)

ஆதாரமாறினுக்கும் மூடேசென்று
ஆதிமுதலந்தய்வரையுணரும்போது
நீதானேபஞ்சகர்த்தாவாகிநின்றாய்
நிற்குணனேமேலாருதாரத்தாடும்

பாதாதிகேசமுதல்படைத்துக்காத்தும்
    பராபரமாய்நின்றிலங்கும் பண்புள்ளோனே
நாதாதிமுடிவதனில் நடனமாடும்நற்சுடரோ
    தெரிசனந்தந்தாளுவாயே (9)

இடகலைபிங்கலையிரண்டெச்சப்பால்நின்று
    இலங்குகின்றகாந்தாரியத்திசிங்ரு
பட்டருகின்றவலம்புருடை புருடனோடு
    பக்குவமாய்குகுவுடன்சங்கினியீரைந்தில்
திடமுடனேயமர்ந்திருக்குந் தேவர்க்கோவேசெந்தில்
    நகரொன்னுந்துரியாதீதந்தன்னில்
நடனமிடுசிவகுருவேயுனையேயிந்த
    நானிலத்தில்நம்பியின்னம்யிருக்கின்றேனே(10)

முற்றிற்று.

யாவினுநிறைந்தே யாட்சோளுவோனே
பாவிமுன்வந்து பகர்ந்திடலாதா

அனைத்துமுன்னருளா மெனவரிந்திடுமளகோர்
நினைத்ததேபெருநிஷ்டையென்றியம்பிடுமறையும்
வினைப்பயனுளவடியன் யானிதுவரையுனையே
நினைப்போதாகிலும் சிந்தியாதென்விதிசெயலோ (1)

செயலுஞ்செய்கையிற்செலுத்திடுமாதவவெனநீ
மயலினிற்படவைத்தனையென்செய்தேனடியேன்
பயமிகக்கொடுன்பாதமேதுணையெனப்பலகால்
நயமிகத்தருவாயெனப்பணிந்தனனுனையே (2)

உன்னையன்றியிலொருபொருளுண்டெனவுணரும்
பின்னமாகியபெயர்கள்போலெனைமுழுதும்
நின்னருள்தனைத்தந்திடவெண்ணமிங்கெனையும்
கன்னல்சேர்மொழிமாதுடன்சேர்த்ததைக்கருதே (3)

கருத்திலேயுனைப்பணிந்திடுமென்பனாமுழுதும்
இருத்திஞயுனதடியினிலேலமைழயிவ்வுலகில்
ஒருத்தனுந்தவிர்த்துழல்கின்றவண்ணமிங்குணர்ந்தும்
விருத்தியைத்தவிர்த்தாட்கொளவில்லையெம்மரசே (4)

அரசதாகியவயனரியான்முதல்முனிவோர்
விரசுபாதமதெனுமுனதடியினைமுழுதும்
பரசிடாவணப்மாய்கையில்சிக்கினடியேன்
சிரசையுன்பதஞ்சூட்டியும்வணங்குவனினியே (5)

சேயவண்டங்களனைத்தனையதனினிம்நிறைந்து
ஆயும்பல்லுயிரெத்தனையமைந்ததர்குறுதி
தோயும்வல்லபமெத்தனையளித்ததென்னளவும்
நீயுமோர்ந்திலையென்செய்வேன்விதிவசத்தளவோ (6)

அளவிலாதொருசித்தர்களமரர்கள்முனிவோர்க்
குளவதாகியபெரும்பதமளித்தனையெனையும்
களவுவஞ்சனைகாமத்தாலுழன்றமிக்கடியேன்
தளருமாமதிபோலெனையலமைப்பதுந்தகுமோ (7)

தக்கவான்பொருள்வெளிக்குளேவெளியெனத்ததும்பி
மிக்கமின்மயவடிவமாய்அன்பர்களுளத்நிற்
புக்கிஞபடியேனுமாமாய்கையில்முழுதுஞ்
சிக்கியேபுனையரிந்திடாவண்ணமேயமைத்தாய் (8)

அமைபுழுக்கனிகண்டுதேன்பாலெனுமொன்ருய்க்
குமையுமானந்தப்பெருவெளிதன்னிலேயமர்ந்தாய்
சுமையெனுங்கடற்தென்னையேதூக்கியிங்கலுத்தேன்
தமையரிந்திம்ந்தரமதைஅருளுவைமுதலே (9)

முதலுமந்தமும்நவதில்வாழ்ந்திடுமுடிவாம்
பதமெனக்கருள்புரிந்தென்னையாண்டனைதடியிற்
சிதரிடாவணஞ்சேர்த்தனையாண்டுகொளெனவே
நிதமுவாழ்த்தினனேற்றின்றுனதடிதனையே (10)



முருகன் றுணை.

# திருச்செந்திற்கண்ணி.

---

வராநுயோவேனவளங்கிடுவாநும்
காராயோவேனக்கதரீடம்மோழியே,

கண்ணிகள்.

முத்திக்கரசானசெந்தில்நாதா - மூ
தறிவிற்கொலுவிருக்குமெந்தன்நாதா 1.

எத்திக்கும்போற்றிசெய்யும்செந்தில்நாதா - எளி
யென்குறையுங்கேட்டருள்வாஎந்தன்நாதா 2.

காயாம்பிலக்கலேயேசெந்தில்நாதா - எந்தன்
கர்மம்வொளிக்கலேயே எந்தன்நாதா 3.

மாயந்தவிர்கலேயேசெந்தில்நாதா - நின்றன்
வடிவையறிகிலேயேஎந்தன்நாதா 4.

இன்னம்துயர்பொருக்கேன்செந்தில்நாதா - இங்
கெல்லாவரமும்தந்தருள்செய்எந்தன்நாதா 5.

உன்னைமறந்தறியேன்செந்தில்நாதா - எனக்
குண்மையுரைத்தருள்வாய்எந்தன்நாதா 6.

ஜகத்திற்றவிக்குகின்றேன்செந்தில்நாதா - நின்றன்
றுளினைக்கிழாக்கியருள்எந்தன்நாதா 7.

சுகத்தின்கடற்பெருக்கேசெந்தில்நாதா - நின்றன்
றோன்றலைகாத்தருள்புரிஎந்தன்நாதா 8.

ஐம்புலபாவிகளாலேசெந்தில்நாதா - நின்றன்
அடியுமறந்துநின்றேன் எந்தன்நாதா 9.

இன்பப்பதியமர்ந்தசெந்தில்நாதா - எனை
ஈடேற்றிவைப்பதெப்போ எந்தன்நாதா 10.

பார்க்கக்கிடைத்திடுமோசெந்தில்நாதா - நின்றன்
பாததெரிசனம்மெமக்கெந்தன்நாதா 11.

தீர்க்கசெழுங்கமலச்செந்தில்நாதா - உந்தன்
திவ்வியமுகமெங்குளதோயெந்தன்நாதா 12.

பன்னிரண்டுகண்ணிருந்தும்செந்தில்நாதா - என்னை
பார்க்கமனம்வந்ததில்லையெந்தன்நாதா 13.

அன்னியனென்றேநினைத்தால்செந்தில்நாதா - எனை
யாண்டருள்வதார்புவியில்யெந்தன்நாதா 14.

இத்தனைசோதனைபோதுஞ்செந்தில்நாதா - என்னை
யீடேற்றிவைத்தருள்வாய்யெந்தன்நாதா 15.

புத்திமிகமயங்கிசெந்தில்நாதா - எங்கும்
புலம்பவிட்டதென்னவிதம்யெந்தன்நாதா 16

தாயிருக்கப்பிள்ளையிக்குசெந்தில்நாதா - மிகவும்
தட்டழியநீதியுண்டோயெந்தன்நாதா 17.

தூயகருணைபெருக்கேசெந்தில்நாதா - உந்தன்
தொண்டனெனப்பேரெடுத்தேனெந்தன்நாதா 18.

சித்தமடங்கிலையேசெந்தில்நாதா - எனைத்
தேற்றிவைப்பதென்றுகொலோயெந்தன்நாதா 19.

பத்தர்பதம்பணிந்துசெந்தில்நாதா - எந்தன்
பாவமொழிப்பதெப்போயெந்தன்நாதா 20.

எல்லாமரிந்திருந்துஞ்செந்தில்நாதா - எளி
யேனைமட்டும்நீக்கிவைத்தாய்யெந்தன்நாதா 21.

பொல்லாதபாதகன்யான்செந்தில்நாதா - நின்றன்
பொன்னடிக்குள்ச்சேருவனோயெந்தன்நாதா 22.

காமமொழியிலையேசெந்தில்நாதா - என்னைக்
கண்டோர்பழிக்கலாச்சேயெந்தன்நாதா 23.

ஊமன்கனவினைபோற்செந்தில்நாதா - என்னுள்
ளொளித்திருந்தனுாயமென்னயெந்தன்நாதா 24.

கோபக்கொழுந்தையவிசெந்தில்நாதா - நல்ல
குணமென்னுந்தேனருள்வாயெந்தன்நாதா 25.

பாபச்சுமையைமாற்றுஞ்செந்தில்நாதா - நின்றன்
பக்த்தருடன்சேர்த்தருள்வாயெந்தன்நாதா 26.

வேதத்தவக்குடமேசெந்தில்நாதா - அருள்
வேலினையுங்கைபிடித்தோெந்தன்நாதா 27

சூதத்தவாசகமேசெந்தில்நாதா - மிக்க
துயரற்றபூரணமேமெந்தன்நாதா 28.

ஓதற்கரியவனேசெந்தில்நாதா - நின்றன்
னுயர்பதத்தைக்காண்பதெப்போவெந்தன்நாதா 29.

சாதற்கினிமுறையாசெந்தில்நாதா - நின்றன்
றுசனெனப்பேரொடுத்துமெந்தன்நாதா 30.

உனக்குரியனல்லனென்றாய்செந்தில்நாதா - இந்த
உலகமென்னசொல்வதறியெந்தன்நாதா 31.

வனத்துளிருந்திளைத்துஞ்செந்தில்நாதா - நின்றன்
வடிவையறியாதுநின்றேனெந்தன்நாதா 32.

களைப்பையறிந்துதவுஞ்செந்தில்நாதா - என்மேல்
கருணைவைக்கக்காண்கிலனேஎந்தன்நாதா 33.

பிழைக்கவகையறியேன்செந்தில்நாதா - நின்றன்
பிள்ளையைக்காவெவ்விதமும்எந்தன்நாதா 34.

இத்தனைதூரமுறைத்துஞ்செந்தில்நாதா - உனக்
கெண்ணமென்மேற்கண்டதில்லைஎந்தன்நாதா 35.

சித்தர்புகழுத்தமனேசெந்தில்நாதா - வந்து
தெரிசனந்தந்தாள்வதெப்போஎந்தன்நாதா 36.

அட்டவசுக்களுஞ்போற்றுஞ்செந்தில்நாதா - எனக்
காதரவிங்குன்றுணையேஎந்தன்நாதா 37.

நட்டமிட்டோருக்குகந்தசெந்தில்நாதா - நின்றன்
நளினப்பதமருள்வாய்எந்தன்நாதா 38.

கெருடகாந்தருவபணிசெந்தில்நாதா - நின்றன்
கிருபையடியேர்க்கருள்செய்யெந்தன்நாதா 39.

புருடசிகாமணியேசெந்தில்நாதா - யிந்தப்
புலையனைவந்தாண்டருள்வாய்எந்தன்நாதா 40.

ஆறுசமையங்கடோருஞ்செந்தில்நாதா - மிக்க
அருள்விளையாட்டைப்புரியுமெந்தன்நாதா 41.

கூரும்தமிழ்மொழியைச்செந்தில்நாதா - மனங்
கொண்டுகடைக்கண்ணருள்வாயெந்தன்நாதா 42.

நீபடைத்தஉயிர்களிற்செந்தில்நாதா - இந்த
நீசனைப்போற்கண்டதுண்டாஎந்தன்நாதா 43.

வாவெனக்கருணைபொழிசெந்தில்நாதா - நின்றன்
வரிசைப்பதம்வணங்கயெந்தன்நாதா 44.

கெஞ்சினவென்றன்னிடத்தில்செந்தில்நாதா-உந்தன்
கிருபைவைப்பதென்றுகொலோஎந்தன்நாதா 45.

அஞ்சலெனவந்திடிலென்செந்தில்நாதா - அடி
யேற்கொருக்காற்பூமிதனில்எந்தன்நாதா 46.

அருளென்றுமாலையத்திற்செந்தில்நாதா - என்றும்
அன்புருவதாகநின்றேயெந்தன்நாதா 47.

இருளென்னும்பொய்த்திரையைச்செந்தில்நாதா-இங்
கெடுத்தெறிந்தாட்கொள்வதெப்போஎந்தன்நாதா 48.

கண்ணிலாந்தகருணையிற்செந்தில்நாதா - இந்தப்
கடையேனக்கும்புரிந்தருள்எந்தன்நாதா 49.

எண்ணிலாந்தகோடிபக்தர்செந்தில்நாதா-நின்றன்
இணையடிக்கிளாகினரோயெந்தன்நாதா 50.

தாமதித்திங்கிருந்திடில்செந்தில்நாதா - தமி
யேனுடம்புதவருமேஎந்தன்நாதா 51.

தோம்திமிதாமென்றிலங்குஞ்செந்தில்நாதா - எனைத்
துன்பக்கடல்விட்டகற்றுமெந்தன்நாதா 52.

ஒன்றோநான்சொல்லியழசெந்தில்நாதா - ஒரு
ஒருகோடியென்றாலுமடங்காதெந்தன்நாதா 53.

என்றேயிரங்குவதுஞ்செந்தில்நாதா - எளி
யேன்றுயரம்பார்க்கிலையாயெந்தன்நாதா 54.

அப்பாசலித்துவிட்டேன்செந்தில்நாதா - வடி
யேனுறைபொருக்கனுதிங்கெந்தன்நாதா 55.

ஒப்பாருனக்கெதிரோசெந்தில்நாதா - எனக்
குன்னையன்றிவேறொனக்கிங்கெந்தன்நாதா 56.

தலைவிரிகோலமதுவாய்ச்செந்தில்நாதா - இந்த
ஜகமுழுதுஞ்சுத்தவைத்தாயெந்தன்நாதா 57.

கலையைநிலைநிறுத்திசெந்தில்நாதா -எந்தன்
கருத்திலமர்ந்தருள்வாயெந்தன்நாதா 58.

குண்டலிச்சத்தியதனிற்செந்தில்நாதா - ஒரு
குறைவும்வராதேயருள்வாயெந்தன்நாதா 59.

வண்டர்குலப்பகையேசெந்தில்நாதா - இந்த
வஞ்சனெனக்குமருள்செய்யெந்தன்நாதா 60.

வலமுமிடமறியேன்செந்தில்நாதா - வடி
வேலுணரநீதியெங்கெங்கெ யெந்தன்நாதா 61.

காலும்தலையுணரோன்செந்தில்நாதா - கதிர்
வேலுணரநீதியுண்டோயெந்தநாதா 62.

சந்திரசூரியனென்பர்செந்தில்நாதா - தர
மின்னதென்றறிகிலேனேயெந்தன்நாதா 63.

சோதிமலையொத்ததென்பர்செந்தில்நாதா - அதிற்
றோற்றுவதேன்பச்சைநிறமெந்தன்நாதா 64.

பாதிபிரிவானதென்னசெந்தில்நாதா - வந்த
பச்சைவடிவெங்குளதோயெந்தன்நாதா 65.

மலைப்புதல்விதோன்றலென்றுஞ்செந்தில்நாதா-யிந்த
மானிலத்தோர்போற்றுவதென்யெந்தன்நாதா 66.

சிலைநுதலாலம்பிகையாற்செந்தில்நாதா - வரும்
தீர்த்தமதிறக்கண்டதென்னேயெந்தநாதா 67.

தீர்த்தமெனுங்கங்கையென்னேசெந்தில்நாதா - மிக
சிவன்தலையிலேமுடித்ததெந்தநாதா 68.

ஆர்த்தமொழியென்னுளதோசெந்தில்நாதா - அரன்
ஞநியரும்யோகமுறவெந்தன்நாதா 69.

யோகம்யோகமென்றுரைப்பர்செந்தில்நாதா - மிக
யோகமிருந்தாலல்வோயெந்தன்நாதா 70.

ஆகமபுராணவேதஞ்செந்தில்நாதா - இதை
யன்றிவேறொன்றுன்னலேயெந்தன்நாதா 71.

எத்தனைஜென்மமோமுன்னுஞ்செந்தில்நாதா - மிக்க
எடுத்துழன்றழின்றதிங்ஙனெந்தன்நாதா 72.

அத்தனைக்குமேபிழைத்துச்செந்தில்நாதா - இவ்
வவனிதனில்வைத்தனையேயெந்தன்நாதா 73.

உலகோருரைக்கும்விதம்செந்தில்நாதா - இங்ங
னென்றுயான்சொல்வதர்க்குயெந்தன்நாதா 74.

இலவுகாத்தகிளிபோல்செந்தில்நாதா - யாரும்
யின்பமறிகிலரந்தோயெந்தன்நாதா 75.

நாதமென்பர்விந்துயென்பர்செந்தில்நாதா - அந்த
நாதவிந்தோதாரணைச்சொல்லெந்தநாதா 76.

வேதமென்பர்போதமென்பர்செந்தில்நாதா-ரொண்டும்
மேவுமிடமோமனமும்யெந்தநாதா 77.

மனம்பொருளென்றேயுரைப்பர்செந்தில்நாதா-அவர்
மதியிலரென்றேசொலவாயெந்தநாதா 78.

சினமென்னுஞ்சிங்கமதைசெந்தில்நாதா - வரும்
சிம்புளைப்போல்வந்தகற்றுமெந்தநாதா 79.

கயமெனுமானுவத்தைச்செந்தில்நாதா - என்றும்
கட்டோடடக்கியருள்ளெந்தநாதா 80.

பயமென்னுமாழிதனிற்செந்தில்நாதா - நல்ல
படவிணைப்போல்வந்தகற்றுமெந்தநாதா 81.

காமமெனுஞ்சூழல்தனைச்செந்தில்நாதா - வருங்
கனவிணைப்போல்வந்தளிப்பாயெந்தன்நாதா 82.

யேமனெனுமங்கையர்மேற்செந்தில்நாதா - என்றும்
எண்ணம்வராதேயொழிப்பாயெந்தன்நாதா 83.

நானெனும்பாசமதிற்செந்தில்நாதா - என்றும்
நடுங்குவதுனக்கழகாஎந்தன்நாதா 84.

கோனெனவென்னெஞ்சமதிற்செந்தில்நாதா - வருங்
குறைவுகளையுமொழிப்பாயெந்தன்நாதா 85.

பத்தர்விழிபட்டிடினும்செந்தில்நாதா - எல்லாம்
பவமொழியுமென்றனரோயெந்தன்நாதா 86

அத்தநின்னருட்ப்பெரிலோசெந்தில்நாதா - உடம்
பழிகுவதென்ஞேன்றுளதோயெந்தன்நாதா 87.

அளவிறந்தகோடிசித்தர்செந்தில்நாதா - நின்றன்
அருள்மகிமையாலமர்ந்தாரெந்தன்நாதா 88

உளவறியாமாந்தர்களுஞ்செந்தில்நாதா - இந்த
உடம்பிலென்னவென்றேழிந்தாரெந்தன்நாதா 89.

நாம்பிரமமென்றுரைப்பர்செந்தில்நாதா - யீதே
நாவினுக்கோரவசனம்யெந்தன்நாதா 90.

தாம்பிரமமென்றிருந்தாற்செந்தில்நாதா - இந்த
சகமுதித்தவாறேதுவோயெந்தன்நாதா 91.

அன்னேசிலதரிந்தாற்செந்தில்நாதா - இந்தி
ராதிகட்குமேலென்கின்றோஎந்தன்நாதா 92.

பன்னேரிளைத்தவஞ்செந்தில்நாதா - என்றும்
பகர்வதெவர்அவரருமையெந்தநாதா 93.

உழைக்கரியாமாந்தரந்தோசெந்தில்நாதா - தெய்வம்
ஒன்றுமிலேநாமென்கின்றாரெந்தன்நாதா 94.

விளைக்குந்திருவருளாள்செந்தில்நாதா - அன்பர்
மேலுமற்புதமிளைத்தவொந்தன்நாதா 95.

துரும்பசைக்கசக்தியற்றோர்செந்தில்நாதா - மிக்க
துரியசுகங்காண்பதெங்ஙனெந்தன்நாதா 96.

அரும்பொருளென்றேரமுதேசெந்தில்நாதா - இவ்
வசட்டையுளோர்ரிடஞ்சேராதெந்தன்நாதா 97.

என்றமுன்னபடிக்கேசெந்தில்நாதா - இருக்
காதிமறையினுரைபோலெந்தன்நாதா 98.

ஒன்றும்பெரியர்தொண்டிற்சேர்தில்நாதா - ஒரு
போதும்பிரியாதருள்யெர்தன்நாதா 99.

வள்ளிதெய்வானைக்கரசேசெந்தில்நாதா - மிக
மாலயனபூசிதபாதயெர்தன்நாதா 100.

புள்ளிமயிலில்எழுந்தசெந்தில்நாதா - இந்தப்
புவியலொருக்கால்பருகயெந்தன்நாதா 101.

முற்றுபெற்றது.

திருச்சிற்றம்பலம்.



கடவுள் துணை

திருச்சிற்றம்பலம்.

ஞானசித்தசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

அத்வைதானந்தத்துள்ளடங்கிய

# திருஞானவுந்தியார்.

காப்பு விருத்தம்.

சதுர்மறையிலடங்காததகும்ஞானச்
செழுங்கடலைத்தமியேனுள்ளத்
திதுவதுவென்றெண்ணுமலேக
பராபரமாகியெங்குமான
முதுபொருளைச்சிவக்கியானதேசிகர்தம்
மொழிப்படியேநின்றுபார்க்கில்
எதுவுமதுவாகவுமாய்நின்றிலங்கு
மிலக்கணத்தையேற்றுவோமே.

1. சகலமூர்த்தானுய்த்தழைக்குமொருமுத ல்
சண்முகனுதனேனுந்தீப ற
சமயதலைவனென்றுந்தீப ற.

2. பிரியமுடன்பரிபாகற் குறிப்பி ற்
குரியசொரூபனென்றுந்தீப ற
உருவருவாகினுனுந்தீப ற.

3. சித்தியுமுத்திதிகழுஞ் சிவானந்த ப்
புத்திக்குறியனென்றுந்தீப ற
பொன்னவர்க்கரசனென்றுந்தீப ற.

4. ஏராநிலையினிலேறியபேர்க்கருள் க்
கூராகநின்றோனென்றுந்தீப ற
குமரகுருபரனென்றுந்தீப ற.

5. தூய்மறைக்கப்புறஞ்சொல்லற்றுநின்றநி ன்
நின்னுமத்தைக்காண்பதென்றுந்தீப ற
நானதற்காளோவென்றுந்தீப ற.

6. நானெனும்பெரும்காகத்தையென்னுள ம்
ஏன்தானமைத்தாயென்றுந்தீப ற
இதுமுன்குறையோவென்றுந்தீப ற.

7. முன்னென்றம்பின்னென்றுமொழிவதிங்கேதென்
றுன்னைவணங்கினேனுந்தீப ற
உண்மையுரைப்பாயென்றுந்தீப ற.

8. எண்ணில்பல்கோடியெடுக்குமுடலதை ன்
றண்ணலுரைத்தாரன்றுந்தீப ற
யதனைவிளக்குவானென்றுந்தீப ற.

9. இப்போவுலகிலிருக்குமனிதரி ல்
ஒப்பார்வலியரொன்றுந்தீப ற
ஒருவர்க்கெளிமையேனுந்தீப ற.

10. சீவதயாநிதியாகியாகியதேசிக ன்
திருவருட்டிறியுமோவுந்தீப ற
ஜென்மபலனேயஃதுந்தீப ற.

11. மேலுமோர்வீட்டில்வெகுநாளிருந்தும வ்
வேலியிடிகையிலுந்தீப ற
வேறொன்றில்வாழ்வோமென்றுந்தீப ற.

12. ஜென்மம்வேரில்லையென்றால்சிலநன்மை க
ளின்னமுஞ்செய்வதேனுந்தீப ற
ஈசனடிபெறவென்றுந்தீப ற.

13. இன்னமொன்றுண்டெமக்குளவுண் மை
யஃதன்னையுணாட்போமென்றுந்தீப ற
சந்தோஷமாகக்கேளுந்தீப ற.

14. வேடுவமென்னும்மிகச்சிறுசெந்துசெ ய்
ஊடலரிக்கிடென்றுந்தீப ற
உருவேருண்டாக்குதென்றுந்தீப ற.

15. இன்னமிவைக்கிங்கெடுத்தநூலெல்லாமி ஃ
தன்னையுணர்த்துமென்றுந்தீப ற
சர்க்குருபார்வையாலுந்தீப ற.

16. குருவினருள்கொண்டுகுன்றாதஞான த்
திருவையறிந்திடென்றுந்தீப ற
ஜென்மமொழியவென்றுந்தீப ற.

17. எத்தனையோகற்பகாலமிருந்து ம்
இத்தேசம்ஐக்கியமென்றந்தீப ற
இரண்டற்றிருக்கவென்றுந்தீப ற.

18. ஐம்புலன்றன்னையடக்கியொழித்தா ற்
பொன்னம்பலங்காண்பதென்றுந்தீப ற
அவனேநீயாவாயென்றுந்தீப ற.

19 அறிவுக்கறிவாயகண்டப்பெருக்கான ம்
உருவுக்குருவானென்றுந்தீப ற
உத்தமசீலனென்றுந்தீப ற.

20. எங்கெங்குநின்றெங்கெவரெவரோற்றினு ம்
அங்கங்குமாவானென்றுந்தீப ற
ஆனந்தபோதனென்றுந்தீப ற.

21. வேதத்திறுச்சிவெளிக்குளமரந்த ம்
போதத்தலைவனென்றுந்தீப ற
புராரிமகனேயென்றுந்தீப ற.

22. ஏதிங்குருவெனயேற்றியிருப்பத ற்
காதாரமென்னவென் றுந்தீப ற
அவன்வாழ்வதர்க்கிடமுந்தீப ற.

23. அண்டலத்திலுள்ளதுபிண்டத்திலுண்டெ ன்
றறிஞர்கொண்டாடினாருந்தீப ற
அதனையுணர்வாயென் றுந்தீப ற.

24. சகளமொடுநிஷ்களமானதேவேன ச்
சதுர்மறைபுகழ்வதென் றுந்தீப ற
தானுமதுவேயென் றுந்தீப ற.

25. அத்துவிதமென்றதின்கருத்தேதேனி ல்
மற்றிரண்டில்லையென் றுந்தீப ற
வஸ்துவொன்றுண்டேயென் றுந்தீப ற.

26. இல்லையென்றமொழிக்கேதேனுங்காண்கில ன்
அல்லலறுக்கவென் றுந்தீப ற
அத்துவிதமேயென் றுந்தீப ற.

27. ஒன்றேபலவிதரூபமென் றுலகினி ல்
நன்றாயமர்ந்ததென் றுந்தீப ற
நாயதைக்காண்கவென் றுந்தீப ற.

28. சத்தினிறச்சித்தாய் சரபஞ்சபூதத்தி ல்
தொத்துமுலகமென் றந்தீப ற
உணர்வுக்குணர்வாயென் றுந்தீப ற.

29. மதியோடுநீரங்கிமண்ணோடுவாய்வு க்
கதிகாரியாவனொன்றுந்தீப ற
அதுவேகடவுளென்றுந்தீப ற.

30. இருக்குமுதற்கலையெண்பத்தினன்கு ம்
விரிக்கும்பகவனென்றுந்தீப ற
வினையொழித்தாள்வனென்றுந்தீப ற.

31. கல்லைக்கனியெனக்கனாயச்செய்தென்மன த்
துள்ளேயமர்ந்தானென்றுந்தீப ற
உமையவள்பாலனென்றுந்தீப ற

32. அயன்மாலினோடரனைவர்ட்கங் கே
சயஞ்சோதியாகினனுந்தீப ற.
துன்பம்விலக்கவென்றுந்தீப ற.

33. வேதங்களாலேவெளியுளாயாதந ம்
போதனைக்காண்கவென்றுந்தீப ற
புண்ணியமென்செய்தேனுந்தீப ற.

34. எப்பொருட்குள்ளுமிருந்தரசியற்றிடு ம்
மப்பனைக்காண்பவென்றுந்தீப ற
அய்யோதவமேதிங்குந்தீப ற.

35. உயிர்க்குயிராகியொலிக்குங்குறவ ன்
சலிப்பதைதிர்ப்பானென்றுந்தீப ற
தாசர்கள்முன்புவந்துந்தீப ற.

36. விண்ணோடுமண்ணும்விளக்குமொருமுத ல்
அண்ணலெனவறிந்துந்தீப ற
அதனிலமர்ந்தோமென்றுந்தீப ற.

37. என்னவென்சிந்தையின்னந்தான்கலங்கி ன்
றன்னருளன்றியிங்குந்தீப ற
தரமோவுனக்கிதென்றுந்தீப ற

38. மூடமுழிக்குள்முழியாயிருந்தென்று ள்
ளாடும்நடனமென்றுந்தீப ற
அவிநாசிக்குங்கீழென்றுந்தீப ற·

39. சிவராசயோகத்திறத்தையடியனு க்
கவசியந்தந்தருளுந்தீப ற
அடியேனருட்பெறவுந்தீப ற.

40. கோடானகோடிகுலவையிட்டும்ம றை.
யாடியபாதமென்றுந்தீப ற
அதர்க்குமேலறிகிலாதுந்தீப ற.

41. சரிகைவழிக்குள்ளசன்மார்க்கருள்ள ம்
பெருகிநிறைந்தானென்றுந்தீப ற
பிரமசைதன்னியமொன்றுந்தீப ற.

42. கிரியாதிசெய்யுங்கெவுனிகளுள்ள ம
பிரியாதுகிற்போனென்றுந்தீப ற
பிரமாண்டமட்டுமென்றுந்தீப ற·

43. எடுத்தசடத்தோடிறையைவணங்க த்
தொடுத்தனன்நிஷ்டையென்றுந்தீப ற
தோன்றுங்குருவாலென்றுந்தீப ற.

44. குருவேசிவமெனக்குறியாதமாந்தர த்
திருவையறியாரொன்றுந்தீப ற
சென்மமொழிக்காரொன்றுந்தீப ற.

45. ஆத்மஞானத்தையறியாதுநிற்போர்ந ற்
சாத்மீகரல்லரொன்றுந்தீப ற
தன்னையறியாரென்றுந்தீப ற.

46. அங்கிங்குமில்லாதுயெங்குநிறைந்தந ம்
ஆனந்தபோதனென்றுந்தீப ற
அருளுருவானதென்றுந்தீப ற.

47. உலகத்துளெல்லாவுயிர்க்குளிருந்தும்ந ம்
பருவத்துக்கேற்கவென்றுந்தீப ற
பலவிதமாகினானுந்தீப ற.

48. ஜென்மாதிஜென்மப்பழக்கத்துக்கேற்க வே
திருவருள்க்காட்டினானுந்தீப ற
ஜென்மம்நசிக்கவென்றுந்தீப ற.

49. எடுத்தற்கறியாச்சடத்தையெடுப்பதே ல்
லாத்துக்குமேலதென்றுந்தீப ற
இதனிலறிந்துகொள்ளுந்தீப ற.

50. நான்மறையாகமசாஸ்திரஞ்சொல்லி ய
நல்வழியேசெல்லுமுந்தீபற
நாதன்றனைத்தேடியுந்தீப ற.

51. உள்ளும்புறம்புமொன்றாகப்பணிந்தோர்க ட்
குண்மைவிளங்குமென்றுந்தீப ற
உருவருவாகியேயுந்தீப ற.

52. ஞானந்திவெள்ளப்பெருக்கையறிந்தி ட
நற்றவர்க்கேதகுமென்றுந்தீப ற
நாமதைப்பேசிலென்றுந்தீப ற.

53. ஆனாலும்மின்னிலைக்காதாரமாகி ய
ஞானதிகாரனென்றுந்தீப ற
நல்லவடிஞேனுந்தீப ற.

54. உருவங்களெல்லாநம்முடையானரு ள்
உண்மையாய்காண்பதென்றுந்தீப ற
ஓதுமறைகளென்றுந்தீப ற.

55. எவறெவரொவ்விதமாகநின்றேத்தினு ம்
அவரவர்க்காகினனுந்தீப ற
ஆத்மகோடிகளுக்குள்ளுந்தீப ற.

56. ஆகையினலெல்லையவன்வடிவென்றி ங்
கன்புடன்காண்பாயென்றுந்தீப ற
அதனருளாலேயறியுந்தீப ற.

57. பகவனென்றென் றநம்பக்தர்கள்சொல்லி ன்
பயனையறிந்துகொள்ளுந்தீப ற
பாவித்தகோலமாமுந்தீப ற.

58. இத்தனைக்கெல்லாமிருந்தநற்கார ண
மேற்றமனதேயென் றுந்தீப ற
ஏலாதடக்கவென் றுந்தீப ற.

59. ஒன்றானவஸ்தினுயர்பதம்போற்றி ட
நன்றாயுணர்த்தேனென் றுந்தீப ற
நாதாக்கள்சொல்ப்படியுந்தீப ற

60. இந்தவிதமாயிருந்திடுக்கோலத் தை
என்றும்பணிந்திடென் றுந்தீ ப ற
இறையேகுருவாவானுந்தீப ற.

61. வந்தகுருவின்மலர்ப்பதம்போற்றி ட
வானோர் துதிப்பரென் றுந்தீப ற
வஸத்தையறிந்தேயென் றுந்தீப ற.

62. ஆனபல்பாஷையனேகம்படித் து
மக்கியானமொழியாதென் றுந்தீப ற
காமதுவாகோமென் றுந்தீப ற.

63. தத்துவமெல்லாக்தளபாடமாக்கினு ஞ்
சித்தமடங்காதென் றுந்தீப ற
திருவருளன்றியென் றுந்தீப ற.

64. பூமிதனைவலமாகப்புரிந்தாம க்
காமமொழியாதென்றுந்தீப ற
கந்தனருளன்றிங்குந்தீப ற.

65. நீடுமேலைக்குள்ளிமைமுடிருந்தபி க்
கூடுமொழியுமெனறுந்தீப ற
கோடியுகஞ்சென்றமுந்தீப ற.

66. அஷ்டாங்கயோகமறிந்தாலுமுள் ள
மடங்காதென்றேநினைத்துந்தீப ற
அருளோடுங்கூடாதென்றுந்தீப ற.

67. உண்டிசுருக்கியொருபோதுண்டாலும்பி ன்
கண்டபலனேயந்துந்தீப ற
கட்டையொழியவென்றுந்தீப ற.

68. அணிமாதிசித்தியடைந்தாலுமானந் த
மணிநாதங்கேட்காதென்றுந்தீப ற
மாற்றிப்பிறக்கவென்றுந்தீப ற.

69. மூலத்திற்றோன்றிமுடிவிலீரெட்டாய் ப்
பாலத்தின்மேவுதென்றுந்தீப ற
பன்னிரண்டங்குலமென்றுந்தீப ற.

70. ஆதிப்பொருளாயறிவுக்கறிவாய்ந ம்
சோதிக்கொளுந்தேயென்றுந்தீப ற
தோன்றிமறைக்குதென்றுந்தீப ற.

71. ஓங்காரக்கம்பத்துயரேறிநின்றுல்ந ம்
மாங்காரந்திருமென்றுந்தீப ற
மற்றனைத்திலுமில்லையென்றுந்தீப ற

72. காலாலாதித்தன்கனற்கோட்டைதன்னை நீ
மேலாயெழுப்பிடென்றுந்தீப ற
வீசுமதியிடத்துந்தீப ற

73. மூலக்கனலைமூட்டிவிட்டாலுச் சி
பாலைக்கறக்குமென்றுந்தீப ற
பற்றியமோசகமதென்றுந்தீப ற.

74. ஆதித்தனுள்ளேயமருங்கனல து
பேதித்துக்காண்டெலென்றுந்தீப ற
பேசிடும்பூரகமாமென்றுந்தீப ற.

75. மதிபோடிரவி வளமாகச்சேர்க்கந ம்
விதியைப்பெருக்குமென்றுந்தீப ற
விளங்கியகும்பகமென்றுந்தீப ற

76. அண்டபிண்டத்துள்ளமரும்பகவனையு ன்
திவாலறிந்திடென்றுந்தீப ற
அய்நான்குவாசலென்றுந்தீப ற.

77. வாசலைக்கண்டுமெவ்வாசலுள்ளேசெல் ல
கூசிடுங்கண்களென்றுந்தீப ற
கொழுந்துநெருப்பாமென்றுந்தீப ற.

78. நெருப்பையறிந்தங்குநினைவோடுசெல்லவ ப்
பொருப்பையறிவாயென்றுந்தீப ற
பொன்மலைமேருவிலுந்தீப ற

79. மேருவைக்கண்டேயம்மேருவிலேயருள் ச்
சேர்வையைகாண்பாயென்றுந்தீப ற
தீனர்கள்போற்றிநின்றுந்தீப ற.

80. மண்டலமூன்றினுள்மத்தியிலேயரு ள்
கொண்டிடுங்கோலமென்றுந்தீப ற
குருபரதேவனென்றுந்தீப ற.

81. இருதயமென்றுமிரத்னப்பொருப்பி ல்
இறையருளாட்டமென்றுந்தீப ற
யெமக்குளிருந்தென்றுந்தீப ற.

82. மனத்தைவடிவின்வசத்தேயொடுக்கத்து ற்
சனத்தையடைக்குமென்றுந்தீப ற
துருவநவேதனிலுந்தீப ற.

83. கண்ணேயெவைகட்குக்காரணமாமதை ப்
புண்ணுக்குப்போடாமலுந்தீப ற
புலன்கள்வசத்தேவிட்டுந்தீப ற.

84. கண்ணினிற்கண்ணைக்கனிவுடன்காண்கப்ப ல்
யெண்ணமொழியுமென்றுந்தீப ற
இரவுபகலறுமுந்தீப ற

85. இரவுபகலற்றிருக்கும்பெரியோ ர்
ருறவேபெரிதாமென்றுந்தீப ற
உண்மையறிந்திடவென்றுந்தீப ற

86. காமக்கடலைக்கடந்தபெரியோர்க ள்
நாமத்தைப்போற்றியிங்குந்தீப ற
நன்மைகிடைக்குமென்றுந்தீப ற.

87. முத்திதருஞ்சோதிமுருகாவென்றுலட் ட
சித்தமருளுமென்றுந்தீப ற
சிற்சபைதோன்றுமென்றுந்தீப ற.

88. மோனமௌனமூலக்கனல்தன்னி லே
ஞானவுதையமென்றுந்தீப ற
நாமதுவாமிடவுந்தீப ற.

89. சிந்தையினுள்ளேதெள்ளாமுகாய்த்திர ண்
டுந்தியில்நிற்பதென்றுந்தீப ற
உண்ணைக்கிடைக்காதென்றுந்தீப ற.

90. பற்றற்றநின்றாற்பக்தர்களுள்ள ம்
தித்திக்குந்தேவனென்றுந்தீப ற
சித்தெல்லாஞ்செய்வானென்றுந்தீப ற.

91. மட்டேக்கடங்காதமாமாயைதன்னை நீ
கட்டோடடக்கிடென்றுந்தீப ற
காலன்விலகுவானென்றுந்தீப ற.

92. வஞ்சமனத்தின்வகையையடக்கிடி ல்
கொஞ்சம்பகவனென்றுந்தீப ற
குழைர்தையைப்போலநின்றுந்தீப ற.

93. ஈன்றவுலகமீரேழுக்குள்ளேயருள் த்
தோன்றுமிடமேதிங்குந்தீப ற
துரியப்பெருக்கினிலுந்தீப ற.

94. உண்டானதெல்லாமுரைத்தானென்றென்னேடிங்
கண்டாதுநின்றுயோவுந்தீப ற
அதுமுன்னேசெய்தவமுந்தீப ற.

95. தாடகமாகுந்தனியெழுத்தைக்கவ் டு
வீடகமாகுமென்றுந்தீப ற
வெட்டவெளிக்குள்ளேவுந்தீப ற.

96. உயிரோடுலகமுதிப்பதன்முன் னே
வெயிலாகிநிற்போனென்றுந்தீப ற
விளக்கொளிபோலநின்றுந்தீப ற.

97. பாலினுள்நெய்போலிப்பாருலகெங்கு ம்
சாலநிரைந்தானென்றுந்தீப ற
சண்முகனுதனென்றுந்தீப ற.

98. வித்துள்ளமர்ந்தவிருக்ஷங்கள்போலெங்கு ம்
தொத்திநிறைந்தானென்றுந்தீப ற
தோன்றுஞ்சடத்தினுள்ளுந்தீப ற

99. சத்தம்பிரந்ததலமதைக்கண்டால்சின்
முத்திரையாகு மென்றுந்தீபற
முதறிவில்குடியுந்தீபற

100. பெண்ணோடலியானும்பெருமூருமிலா
தன்னல்வடிவமென் றுந்தீபற
அதிதிவிருள்க்கென் றுந்தீபற

101. உறக்கம்பசியோடுணர்வுமொழிந்தால்பின்
பிறக்கவும்வேண்டாமென் றுந்தீபற
பேசுமறணமில்லுந்தீபற

102. தாயாகநீயித்தரைக்குள்ளிருக்கநான்
மாய்வேனோயின்னுமிக்குந்தீபற
மலர்த்தாள்பெறும்வரையுந்தீபற

103. வஞ்சமனத்தின்வல்லிருளோடகற்
செஞ்சிலம்பாடச்செயுந்தீபற
திரும்பிப்பிறக்காதென் றுந்தீபற

104. பாதத்தைக்காட்டியப்பாதத்தின்மேவிய
நாதத்தைக்காட்டச்செய்யுந்தீபற
நான்கடத்தேறிடங்குந்தீபற

105. தன்டவின்பங்கள்தடருதமாந்தருள்
அன்பனுமாவோனென் றுந்தீபற
ஆனந்தமாக்குவானுந்தீபற

106. நஞ்சைத்தின்பதைப்போலன்றல்தனருள்பெற
யிக் கஞ்சுவதென்னவென்றுந்தீப ற
அன்பிற்புகுந்துநீயுந்தீப ற

107. சாஸ்த்திரந்தன்னைச்சதாகாலம்பார்க்கினு ம்
சூஸ்த்திரங்காணாயென்றுந்தீப ற
துன்பம்வில்காதென்றுந்தீப ற

108. காதலால்க்கண்ணீர்கறைபுரண்டோடுவோர் க்
காதாரமாகுமென்றுந்தீப ற
அத்வைதசேர்வையென்றுந்தீப ற

109. என்றுமிருப்போமென்றெண்ணத்தைவிட்டோ ற்
குன்றினைப்பார்ப்பாயென்றுந்தீப ற
குகனுருத்தோற்றமென்றுந்தீப ற

110. எத்தனையோபுத்தியெடுத்திங்குசொல்லினு ஞ்
சற்றேனுங்கேள்க்காதென்றுந்தீப ற
தாளைவணங்கிடென்றுந்தீப ற

111. மாமாய்கையென்னுமிவ்வல்லிருட்குள்ளோ ம்
சோமனைக்காண்பாயென்றுந்தீப ற
சொல்லியசாக்கிறத்துளென்றுந்தீப ற

112. சந்திரன்றன்னைசதாகாலம்பார்த்திட ச்
சுந்தரமாகுமென்றுந்தீப ற
சொரூபமரையுமென்றுந்தீப ற

113. பளிங்கெனுங்குன்றில்ப்பளாயின்றிருவரு ள்
ஒளிருமிடமறிந்துந்திப ற
உச்சிக்குநேரோசென்றுந்திப ற

114. குன்றேசிறிதாமக்குன்றுளுலகங்க ள்
சென்றேயுதிக்குமென்றுந்திப ற
சிற்சபைக்குள்ளேயென்றுந்திப ற

115. சபையோபொதுவாமச்சபைக்குளடைந்தேய ங்
கபையம்புகுவோமென்றுந்திப ற
யாவர்க்குஞ்சொந்தமென்றுந்திப ற

116. சொந்தப்படுத்திசுகிக்கும்பொருளைவி ட்
டிந்தவுலகிலென்றுந்திப ற
எற்கும்பூசல்புரிவதுந்திப ற

117. நீரில்குமிழிநிலையிலாப்பாண்டமி ஃ
தாருக்குந்தெரிந்ததென்றுந்திப ற
அப்யோகலகமேனுந்திப ற

[டோருள்
118. என்றைக்கிருப்போமென் றெண்ணத்தைக்கண்
ஒன்றேனுங்காண்கிலனுந்திப ற
ஒருகோடிதேடினும்முந்திப ற

119. ஆக்கினைக்கோட்டையரன்றிருச்சேர் வை
பார்க்கிடைப்பதேதுந்திப ற
பாவக்கண்கொண்டேயென்றுந்திப ற

120. கண்ணையறிவா மக்கண்ணைக்கொண்டோ ம்
அன்னலைக்காண்பதென்றுந்திப ற
யார்க்குங்கிடையாதென்றுந்திப ற

121. அன்னலிருப்பிடமண்டபிண்டத்துளெ ன்
றெண்ணிப்பணிந்தேயாமுந்திப ற
இரண்டற்றிருக்கவென்றுந்திப ற

122. அண்டத்திலுள்ளவதிசயம்யாவையு ம்
பிண்டத்தில்காண்பதென்றுந்திப ற
பிரம்மொன்றுள்ளதென்றுந்திப ற

123. பிரமமொன்றேபிரமவிஷ்ணுருத்திராதியா ய்
கர்மமொழிப்பானொன்றுந்திப ற
காசிலியெங்கும்நின்றுந்திப ற

124. மூர்த்திவடிவாயிம்மூன்றுளமர்ந்தன ர்
கீர்த்தியைக்காண்பதென்றுந்திப ற
கிருபைபெருக்காலென்றுந்திப ற

125. என்றுமெம்மீசனிவ்வெல்லாவுலகத்து ம்
ஒன்ருயிருந்தாலுமுந்திப ற
உறைதற்கிடமாமொன்றுந்திப ற

126. ஓராமொன்றேயெனக்குறைத்தவித்ததினு ள்
சீராயுரைப்பாயென்றுந்திப ற
தெரிசனையாமிடமுந்திப ற

127. சரிதைகிரியாதிதன்னைப்புரிவோர்க ள்
குறியவடிவமூன் றந்தீப ற
உரைத்தமும்மூர்த்தியென் றந்தீப ற

128. ஆகமமாறணமானபல்நூல்களு ம்
யூகமாய்ச்சொன்னதிஃதுந்தீப ற
உரைக்குநங்கேட்கவென் றந்தீப ற

129. மற்றொருமூன்றின்வடிவையறிவத ற்
முற்றதுயோகமென் றந்தீப ற
உரைக்குமறைகள்யென்றுந்தீப ற

130. தன்னையறிந்துதவம்புரியாதமை க்
கன்னெஞ்செனக்கேன்வைத்துந்தீப ற
காட்டாதுவிட்டதென்றுந்தீப ற

131. நாசினுனியில்நடனத்தைக்காட்டந ற்
றேசிகநாக்காதென்றுந்தீப ற
சிற்றறிவுடையோனுக்குந்தீப ற

132. தோற்றியகாட்சிசொரூபத்தில்நின்ற ர
சாக்ஷியிருத்தாதென்னுந்தீப ற
சற்றுமறியாயோவுந்தீப ற

133. இபங்காதியக்கியெழுந்தமனத்தி ன்
பயந்தவிர்த்தான்வைதென்றுந்தீப ற
பாவக்கடலைவிட்டுந்தீப ற

134. குறித்தவடிவிற்கொழுகினானென்பத ற்
றிருக்கப்புரிவதென்றுந்தீப ற
இரணடற்றிருக்கதென்றுந்தீப ற

135. கண்ணுக்குள்ளேஒர்காட்சியைப்போலும் நா
உண்ணுடிப்பாருதேனுந்தீப ற
ஒளிவிலொளிவாகியுந்தீப ற

136. நாபியகத்தேசயம்பெறத்தாக்கோ ம்
ஆவியைக்கண்டாக்காலுந்தீப ற
அழியாதுடம்புவென்றுந்தீப ற

137. அண்டத்தாரானவதிசயமேதன்னி ல்
கண்டத்தளவினிலுந்தீப ற
காணுமொளியாலென்றுந்தீப ற

138. ஆனந்தத்தேனையளிக்குங்குமர னை
ஞானந்தமாக்கிடென்றுந்தீப ற
நன்னிலபூமிமேலுந்தீப ற

139. ஆர்க்குந்தெரியாதருமுகக்கோல ம்
பார்க்கப்பலவிதமென்றுந்தீப ற
பருவத்துக்கேற்கவென்றுந்தீப ற

140. நெற்றிக்குநேரோநிறைந்திடுஞ்சோதிக ண்
டற்சித்துப்போற்றிடினுந்தீப ற
அழியாதுடம்புவென்றுந்தீப ற

141. புருவத்திடையில்பொன்மேருவின்மேலேக ம்
குருவையறிந்திடென்று ந்திப ற
கொழுந்துநெருப்பாமென்றுந்திப ற

142. நெருப்புநெருப்பென்றுநெருங்கியுறைப் பது
பொருப்பினழகேயென்றுந்திப ற
புண்ணியர்காண்பரென்றுந்திப ற

143. குன்றில்நிலாவெனுமன்றிநடுவினி ச்
கண்டகண்காட்சியென்றுந்திப ற
கலைமதிக்கிடையினிலுந்திப ற

144. கானில்பரவியக்கள்ளப்புலன்க ளை
ஞானவாள்கொண்டறிந்துந்திப ற
நானென்பதேகுமென்றுந்திப ற

145. நானென்பதற்றநடுவையறிந்தால ஞ்
ஞானமொழியுமென்றுந்திப ற
நல்வழிசேர்வதென்றுந்திப ற

147. தோன்றுமல்த்தோன்றுஞ்சுகாதீதவாழ்வினி ல்
ஊன்றுநிருப்பதென்றுந்திப ற
நல்லவமுதமுண்டேந்திப ற

148. எல்லைமறந்தேயெனதுயானென்னும்ப ல்
தொல்லையிறக்கச்செய்யுந்திப ற
தோன்றல்முன்வந்திக்குந்திப ற

149. மயிர்ப்பாலத்தேறிமகாசபைக்குள் ளே
முயிர்க்குயிராகிற்றென்றுந்தீப ற
உரைத்தார்க்குரவனன்றுந்தீப ற

150. வஸ்த்தையறியாதவம்பர்கள்தன்னு ட
இஷ்டமுதவாதென்றுந்தீப ற
ஈனத்தையேதருமுந்தீப ற

151. மாயப்பிரவிமயக்கையறுத்தூ ல்
யோகத்திருப்போர்க்குந்தீப ற
ஒழுகுமமுர்தமென்றுந்தீப ற

152. காயாபுரிக்கோட்டைகற்கோட்டையாகிட த்
தாயாஞ்சுழிலையென்றுந்தீப ற
தணலுருவாகுமென்றுந்தீப ற

153. கம்பமற்றவருள்கடலைக்குடித்தேப் ப
மின்பமுடனிடுமென்றுந்தீப ற
யேற்குமனமேடென்றுந்தீப ற

154. மனோலயப்பட்டமகத்துக்களுள்ள ம்
கனுவும்பிரியாரொன்றுந்தீப ற
காருண்யசீலனென்றுந்தீப ற

155. நிமைகுமுன்னேயெந்தலோகத்திலுஞ்சென்றுங்
குமைக்குமனமாமென்றுந்தீப ற
குருவருளாலொழித்துந்தீப ற

156. என்னவென்னோடிங்கெத்தனையோகால ம்
ஒன்றாயிருந்துவிட்டோந்தீப ற
ஒளிக்கத்தலைப்பட்டதுந்தீப ற

157. உன்னோடுசேர்ந்தேபுழன்றுவுழன்றுபி ன்
மண்ணுக்கிரையாகியுந்தீப ற
மாநிலந்தனிற்கெட்டதுந்தீப ற

158. என்னோடிருந்தேயிறப்பும்பிறப்புமு ன்
றன்னுடல்காச்சுதென்றுந்தீப ற
தருமோவுரைப்பதற்குந்தீப ற

159. என்னுடலுன்னுடலென்றேயுரைத்தசொ ல்
தன்னையுணர்க்கையிலுந்தீப ற
தரம்வேறாயிற்றென்றுந்தீப ற

160. நின்னோடுநானுநெடுநாளிருந்ததா ல்
இன்னுமுணாக்கின்றேனுந்தீப ற
எற்றால்பிழைக்கலாமுந்தீப ற

161. ஆமென்றுகேட்டவ்வகண்டப்பெருக்கினி ல்
ஓமென்றடைவாயென்றுந்தீப ற
உலகந்துதித்தேற்றுமுந்தீப ற

162. அல்லவென்றாலுமருளாகியவில்லி ல்
நல்லம்பைத்தொடுத்துந்தீப ற
நானுன்னையெய்குவேனுந்தீப ற

163. பட்டேனுன்றேடேபலபல துன்பங்க ள்
இட்டமுதவாதென்றுந்தீப ற
என்மேல்க்குறையேதிக்குந்தீப ற

164. அறிவேயெமக்குளவாதாரமேயுன்ற ன்
பிரியமெதுவோசொல்லுந்தீப ற
பின்றேடுவாரோனென்னுந்தீப ற

165. ஆறுமனமேவிங்கையியோவுனைகொல்ல ச்
சிரோதமுண்டோயிங்குந்தீப ற
திருவருள்பெருகவென்றுந்தீப ற

166. இத்தனைத்தூரமிங்கெண்ணுமலேசிடி ல்
உத்தமமாகாயென்றுந்தீப ற
ஒன்றுமடையேனென்றுந்தீப ற

167. இந்தவிதமாயெடுத்துவுடல து
முந்துபல்கோடியென்றுந்தீப ற
முருகனருளன்றியுந்தீப ற

168. அருளைப்பெருவாயாருருக்குமேலு ள்
பொருளையறிவாயென்றுந்தீப ற
பூரணமாவாயென்றுந்தீப ற

169. உன்போலெனக்கிவ்வுயிரைரட்சிக்கு ம்
அனபர்களெங்குமில்லுந்தீப ற
அதிவேகியாகிவாழ்வுந்தீப ற

—•••—




## வெண்பா.

எங்குநிறைந்தேயிருக்குமேதமிலாச்சித்தர்குழாம்
தங்குதிருக்குருகையினுட்டோற்றுதா— இங்கே
சித்தர்களும்வந்தெமக்குச்செப்பாராவையகோ
இத்தலத்திலேழைமுனப்பா.

பொதிகாசலப்புலவன் பூங்கழல்கள்வாழ்க.

—∞—



உ

கடவுள் துணை.

## தங்கப் பாட்டுகள்.

---

சாத்திரங்கள்கற்பீர் - நாற்றிசையுமெய்ப்பீர்
தன்னையுணராதீர் - யென்னபெறப்போறீர்
ஜகமதும்பொய்யே - அகமதுள்வையே
தற்பெருமையாற்கெட் - டற்பரைப்போலானீர்
சந்தையினிற்கூட்டம் - வந்தமொருநாட்டம்
சற்றுமறியீரோ - முற்றுமுணர்ந்தோரோ
தண்ணருளைநாடி - விண்ணதனிற்கூடி
தழைத்திடவேண்டுதற்கா - யடிதங்கம், பிழை
த்திடச்சொன்னேனடி. (1)

கற்பதெதற்கு - கசடறுதற்கு
காலுணர்ந்தல்லோ - மேலுணர்வல்லோ
கண்டறியீரோ - யெண்டிசையோரே
கர்மநாலென்றே - மர்மமதொன்றே

கண்கெட்டபேர்க்கும் - விண்டிடும்யார்க்கும்
காணிடுமெல்லை - தோணிடுஞ்சொல்லை
கருதிநீபாராய் - யுறுதிகொண்டாருய்
காயமெய்யாகுமடி - அடிதங்கம், கண்டவர்க
ட்கெப்போதமே (2)

பக்திநிலைமார்க்கம் - பகர்சரியைநீர்க்கம்
பார்த்துணர்வதெப்போ - ஆர்த்தமொழியப்பா
பன்னிரண்டுகோலால் - உன்னியதேமேலால்
பாழில்விடாமல் - ஊழைநாடாமல்
பார்த்தவர்கள்நேசர் - வார்த்தைபலபேசார்
பாதலம்நீதே - யீதரியாதே
பக்குவமுள்ளோர்போல் - சிக்குமரிமான்போல்
பரவித்தவிக்குமுன்பே - யடிதங்கம், ஸ்ரவணந்
தனிற்படியே (3)

மாயைபெரிதென்றே - ஆயுமறைநன்றே
மாமலரின்மேலே - சோமனருகாலே
மட்டற்றஜோதி - திட்டமதின்வீதி
மறைகளிலுமில்லை - துறையிலுறுசொல்லை
மாதவர்கள்கண்ட - போதமதிலண்ட

மற்றயருக்கேது - பெற்றறியும்போது
மாள்வரொவரண்றோ - பாழிலுழைக்கின்றோ
வகையுணராமலடி - அடிதங்கம், வந்ததுபோத்
பிதற்றல் (4)

அந்தோயுமக்கா - யளைந்தசொல்மிக்க
யறிவிலாதார்க்கே - வெறிகொளும்பேர்க்கே
யருவருப்பாகும் - திருவருட்கேகும்
அந்தணருமற்ற - இந்தவுலகுற்ற
அறிவுள்ளமேலோர் - பிரிவுற்றசீலோர்
அமுதமதென்றே - குமுகுமுமன்றே
அருள்ஞானசித்தன் - குருமுனிபக்தன்
யாவர்க்குமஞ்சானடி - அடிதங்கம், அன்பர்க்குறி
யோனடி (5)

